மலர் 15 இதழ் 102

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190; 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 23—12—74 திங்கள் வெளியூர் 24—12—74 செவ்வாய்

டெல்லி பட விழா:
சிவாஜி புறக்கணிப்பு
3-ம் பக்கம்

## சுப்பிரமணியத்துக்கு

# கருணாநிதி பதில்

## "வறட்சி நிவாரணத்துக்கு தயங்காமல் நிதி தருக"

சென்னை, டிச. 23— "தமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ள வறட்சிக்கு, மத்திய அரசு தயங்காமல் நிதி உதவி தரவேண்டும்" என்று முதல் அமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் கோரிக்கை விடுத்தார்.

தமிழ்நாட்டு வறட்சி நிலை பிரச்னைபற்றி நிதி மந்திரி சுப்பிரமணியம கூறியுள்ள கருத்து சம்பந்தமாக கோவை செழியன் (அதிமுக) இன்று சட்டசபையில் விளக்கம கேட்டார்.

தமிழ்நாட்டின் பஞ்ச நிலை குறித்து நாடாளுமன்ற உறுப்பினர்கள்தான் பேசியிருக்கிறார்கள்.

தமிழக அரசிடமிருந்து கோரிக்கையோ கடிதமோ வரவில்லை என்று மத்திய நிதி மந்திரி சுப்பிரமணியம் கூறியிருக்கிறாரே" என்று தெரிவித்து கோவை செழியன் விளக்கம் கேட்டார்.

இதற்கு பதிலளித்து முதலமைச்சர் கருணாநிதி கூறியதாவது:—

இந்தச் செய்தியை பத்திரிகைகளில் பார்த்தேன். பத்திரிகைகளில் வந்த செய்தி சரியாக இருக்குமஎன்று நான் உறுதி கூறமுடியாது. எவ்வளவு பணம் வேண்டும என்ற தகவல் வரவில்லை. என்று சொல்லியிருக்கலாம். சில பத்திரிகைகள், செய்திகளைத் திரித்து வெளியிடுகின்றன.

### இந்திரா சொன்னது என்ன?

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீதும் கண்டனத் தீர்மானத்தினமீதும், ஒத்திவைப்பு தீர்மானத்தின்மீதும் சட்டசபையில் நடந்த விவாதத்தின்போது நரன் இது பற்றி விளக்கமாக கூறியிருக்கிறேன்.

1969-ல் ஏற்பட்டதைவிட இப்போது வறட்சி நிலை அதிகமாக இருக்கிறது. ஆகவே அதிகப் பணம் தேவைப்படும் என்பதை நானும் தொழில் அமைச்சர் மாதவனும் பிரதமரிடம் கூறியிருக்கிறோம்.

"விவரங்களை அனுப்புங்கள்; பரிசீலிக்கிறேன்" என்று பிரதமரும் சொல்லியிருக்கிறார்.

### தயங்காமல் நாடுங்கள்

விவரங்களைச் சேகரிக்க ரெவினியூ போர்டு உறுப்பினர்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய அறிக்கை இன்னும இரண்டொரு நாட்களில் அமைச்சரவைக் கூட்டத்தில் வைக்கப்பட்டு மொத்தம எவ்வளவு தொகை தேவையாயிருக்கும, மத்திய அரசிடமிருந்து எவ்வளவு தொகை தேவைப்படும என்பது பற்றி அப்போது முடிவு எடுக்கப்படும.

இப்போது தகவல் வரவில்லை என்று சொல்லும நிதி அமைச்சர், தயங்காமல் இதனை ஏற்கவேண்டும என்று பிரதமருக்கு ஆலோசனை தரவேண்டும' என்றார் கருணாநிதி.

## மயானத்தில் பெண் பிணம் கைப்பற்றினர்

சென்னை, டிச. 23— மயானத்திற்கு கொண்டுவரப்பட்ட ஒரு இளம் பெண்ணின் சடலத்தை சந்தேகத்தின் பேரில் போலீசார் கைப்பற்றி வைத்திய பரிசோதனைக்காக ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைத்தனர். அந்த பெண்ணின் பெயர் சுந்தரி வயது 20. புதுமனைக்குப்பம் காசிமேடு பகுதியைச் சேர்ந்தவள்.

## சட்டசபை கூட்டம் முடிந்தது

சென்னை, டிச. 23-தற்போதைய சட்டசபைக் கூட்டத் தொடர் இன்றுடன் (23-ம் தேதி முடிந்தது.)

இன்று பிற்பகல் 1-45 மணியோடு கூட்டம முடிந்தது.

நாளை மேல்சபைக் கூட்டம இருக்கிறது.

இன்று கேள்வி நேரம முடிந்ததும 5 ஒத்திவைப்புத் தீர்மானமும், 4 கவன ஈர்ப்புத் தீர்மானமும் எதிர்க் கட்சியினர் கொண்டு வந்தனர்.

கருணாநிதி விளக்கம்:

## வீரச்செயல் புரிந்த போலீசாருக்கு பதவி உயர்வு தரப்படுமா?

சென்னை, டிச. 23—'வீரச்செயல் புரிந்த போலீசாருக்கு பதவி உயர்வு தரப்படுமா' என்ற கேள்விக்கு முதலமைச்சர் கருணாநிதி இன்று சட்டசபையில் பதிலளித்தார்.

குடியரசுத் தலைவரின் பதக்கம் பெற்ற 4 காவலர்களுக்கு 1973-ம் ஆண்டில் முதலமைச்சர் (அறிஞர் அண்ணா) பதக்கம் வழங்கப்பட்டிருக்கிறது என்றும் முதலமைச்சர் கருணாநிதி சட்டசபையில் கூறினார்.

குடியரசுத் தலைவரின் பதக்கம் பெற்றவர்கள் 1 ஆண்டு கழித்தே முதல்வர் பதக்கம் பெறவேண்டும் என்று வகை செய்யப்பட்டிருக்கிறது என்றும். இந்த நால்வருக்கும் முதல்வர் பதக்கம் தரப்பட்டதற்கு 1 ஆண்டுக்கு முன்பு குடியரசுத் தலைவர் பதக்கம் தரப்பட்டதாகவும் அவர் பதில் கூறினார்.

ஒரு பதக்கம் பெறுபவர் வேறொரு பதக்கம் பெற முடியாது என்பதால், வீரதீரச் செயல்கள் புரிந்தவர்கள் வருந்தக்கூடாதே என்பதால் குடியரசு தலைவர் பதக்கம் பெறுபவர்களுக்கு முதல்வர் பதக்கம் தரப்பட்டது.

10 ஆண்டுகளுக்குக் குறையாமல் நற்சான்றுகளுடன் வேலை செய்தவர்களுக்கும் வீரச் செயல்புரிந்தவர்களுக்கும் முதல்வர் பதக்கம் தரப்படுகிறது" என்று முதல்வர் கூறினார்.

### நிதி உதவி உண்டு

பாலசுந்தரம்: இப்படி வீரச்செயல் புரிந்தவர்களுக்கு பதவி உயர்வு தரப்படுமா?

கருணாநிதி: இதற்கும் பதவி உயர்வுக்கும் தொடர்பு இல்லை பதக்கம் பெறுபவர்களுக்கு நிதி உதவி தரப்படுகிறது.

சௌந்தரபாண்டியன்: பதக்கம் பெறுபவர்களுக்கு எவ்வளவு நிதி தரப்படுகிறது? அதை உயர்த்திக் கொடுப்பதற்கு அரசு முன்வருமா?

கருணாநிதி: போலீசார் அந்தஸ்தில் உள்ளவர்களுக்கு 1000 ரூபாயும், சப்இன்ஸ்பெக்டர் அந்தஸ்த்தில் உள்ளவர்களுக்கு 2000 ரூபாயும் டி. எஸ். பி. அந்தஸ்தில் உள்ளவர்களுக்கு 3000 ரூபாயும் மானியம தரப்படுகிறது.

மேற்கண்டவாறு கருணாநிதி பதிலளித்தார்.

## சிவாஜி கணேசன் ஜெர்மனி பயணம்

சென்னை, டிச. 23—சிவாஜி கணேசன் இன்று காலை 6 மணிக்கு விமானமூலம் ஜெர்மனிக்குப் பயணமானார்.

சிவாஜிகணேசனின் மருமகன் நாராயணசாமியும் மகள் சாந்தியும் ஜெர்மனியில் இருக்கின்றனர்.

அவர்களைக் காண்பதற்காக சிவாஜிகணேசன், அவரது துணைவியார் கமலா, மகன் ராம்குமார், பேத்தி விஜி ஆகியோர் டெல்லி சென்றுள்ளனர்.

டெல்லியிலிருந்து விமானமூலம் அவர்கள் ஜெர்மனி செல்கின்றனர். அவர்களை வழியனுப்பி வைப்பதற்கு வி. சி. சண்முகம் டெல்லி சென்றுள்ளார்.

கவர்னர் உத்தரவு:

## புதுவை நகர சபைகள் பஞ்சாயத்து பதவி காலம் மேலும் 6 மாதம் நீடிப்பு

பாண்டிச்சேரி, டிச. 23— பாண்டிச்சேரி மாநிலத்தில் நகரசபைகள், பஞ்சாயத்து போர்டுகள் ஆகியவைகளின் பதவிக்காலம மேலும் 6 மாதத்திற்கு அதாவது 1975 ஜூன 30 வரை நீடிக்கப்பட்டுள்ளது.

இதுசம்பந்தமாக பாண்டிச்சேரி லெப்டினென்ட் கவர்னர் இன்று ஒரு பிரகடனத்தை வெளியிட்டார்.

பாண்டிச்சேரியில் நகரசபைகள், பஞ்சாயத்துகள் ஆகியவைகளின் பதவிக்காலம் இன்றோடு முடிவடைவதா யிருந்தது.

பாண்டிச்சேரி நகரசபைகள், பஞ்சாயத்துகள் சட்டம் சென்ற ஜனவரி மாதம் 26-ந் தேதியிலிருந்து அமுலுக்கு வந்த பிறகு பாண்டிச்சேரி நகரசபைக் கூட்டம் ஒரே ஒரு தடவை அதாவது டிசம்பர் 20-ந்தேதி நடந்தது.

அடுத்த நகரசபை தேர்தலை அரசு நடத்தும்வரை, பாண்டிச்சேரி நகரசபையின் பதவிக் காலத்தை நீடிக்கவேண்டும் என்று கோரி அந்தக் கூட்டத்தில் ஒரு தீர்மானம நிறைவேற்றியது.

## எம். ஜி. ஆருக்கு சட்டசபை கமிட்டி கடும் கண்டனம்

சென்னை, டிச. 23—சட்டசபை உரிமைக் கமிட்டி, அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆருக்கும். ஹாண்டேவுக்கும் கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

கவர்னர் உரையைப் புறக்கணித்து எம.ஜி.ஆர். வெளியேறியதற்காகவும, சபாநாயகரை, ஹாண்டே இழித்துப் பேசியதற்காகவும சட்டசபை உரிமைக் கமிட்டி இவ்வாறு கண்டனம தெரிவிக்கிறது.

இதுபற்றிய அறிக்கையை உரிமைக் கமிட்டித் தலைவர் ந. கணபதி இன்று சபையில் தாக்கல் செய்தார்.

கீழ்க்காணும் 3 வழக்குகள் பற்றி அந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.

(1) 2-2-73 அன்று கவர்னர் பேருரைக்கு முன் வெளிநடப்புச் செய்த எதிர்க்கட்சி மீதான வழக்கு:—

(2) டாக்டர் ஹாண்டே. மற்றும் தென்னகம், பத்திரிகை ஆசிரியர் மீதான உரிமை மீறல் வழக்கு.

(3) 21-11-73-ம் நாள் அன்று சட்டசபையில் டாக்டர் ஹாண்டேயின் நடத்தை குறித்த சபை உரிமை மீறல் வழக்கு.

கவர்னர் உரைக்கு முன்பு வெளிநடப்புச் செய்த எதிர்க்கட்சிகள்மீதான உரிமைமீறல் பற்றி, உரிமை மீறல் கமிட்டி விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது.—

### எம்.ஜி.ஆர். செய்த இழிவு

திருவாளர்கள் கே. டி. கே. தங்கமணி, ஏ. ஆர். மாரிமுத்து. எம். ஜி. ராமச்சந்திரன், அவர்கள் கட்சியினர் ஆகியோரின் நடத்தை பேரவைக்கு இழிவு சேர்க்கும் செயலாகும்.

ஆகாவ, இது உரிமைமீறிய செயலாகும் என குழு தீர்மானிக்கிறது.

இந்நிகழ்ச்சி நடந்து நாட்கள் பல கடந்துபோனதால், கண்ணோட்டம் காட்டுதல் தகவுடையது என இக்குழு கருதி, 1973-ம் ஆண்டு பிப்ரவரி 2-ம்நாள் அன்று ஆளுனர் உரையாற்றியபோது ஒழுங்கு மீறி நடந்ததற்காக திருவாளர்கள் கே. டி. கே. தங்கமணி, ஏ. ஆர். மாரிமுத்து, எம். ஜி. ராமச்சந்திரன், இவர்கள்கட்சியிலுள்ளவர்கள் ஆகியோரின்நடத்தைகுறித்து இப்பேரவை தனது கடுமையான கண்டனத்தை தெரிவிப்பதோடு, விட்டுவிடலாம் என பரிந்துரை செய்யப்படுகிறது.

மேற்கண்டவாறுஅந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

மற்றொரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

காலம கடந்து போன காரணத்தினால் ஹாண்டே, தென்னகம ஆசிரியர் கே. ஏ. கிருஷ்ணசாமி ஆகியோரின் செயல்களையும, போக்கையும் இப்பேரவை வன்மையாகக் கண்டிப்பதுடன் இதனை விட்டுவிடலாம என்று குழு கருதுகிறது.

### கண்டனம்

21—11—73-ம் தேதியன்று சட்டமன்றக் கூட்டத்தில் பேசிய ஹாண்டே, சபாநாயகரைப் பார்த்து 'கோழை' என்று கூறியதற்காக ஹாண்டே அவைமுன் வருத்தம் தெரிவிக்க வேண்டும் என்று குழு முடிவு செய்திருக்கிறது.

இது குறித்து அந்த அறிக்கையில் கூறியிருப்பதாவது:

இது மிகவும் வருந்தத்தக்கது. அவைத் தலைவரைப் பழிப்பது உறுப்பினர் சார்ந்துள்ள அவையினையே இழிவுபடுத்துவதாகும் என்ற உண்மையினை உணர்ந்து. உறுப்பினர் தமது செயலுக்கு சபையில் வருத்தம தெரிவிப்பதற்காக வாய்ப்பினை அளித்தால், அவர் அவ்வாறு வருத்தம தெரிவிக்கலாம என்ற நமபிக்கையை இக்குழு இழந்துவிடவில்லை.

எனவே உறுப்பினர் ஹாண்டே சபைமுன் வருத்தம தெரிவிப்பார் எனில் அத்துடன் இதை விட்டுவிடலாம என்றும, அவ்வாறு செய்ய அவர் தவறினால் அவரை அவையில் அலுவல்களில் பங்கெடுக்காமல் ஒரு நாளைக்கு விலக்கிவைக்கலாம் என்றும் இக் குழு பரிந்துரை செய்கிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## மாணவர் தலைவர்கள் கைது

பாட்னா, டிச. 23—ஜெயப்பிரகாஷ் நாராயணனை பார்க்கப்போன மாணவர் தலைவர்கள் 3 பேர் கைது செய்யப்பட்டனர்.

பாட்னாவில் உள்ள ஜெயப்பிரகாஷ்நாராயணனின் வீட்டிற்கு அவர்கள் போய்க் கொண்டிருந்தபோது அவர்களை திடீரென்று போலீசார் கைது செய்தனர்.

இந்த மாதம் 11-ந் தேதியன்று தடை உத்தரவை மீறி வன்முறை ஊர்வலம் ஒன்றை நடத்தியதாக ரகுநாத குப்தா, அருண்குமார்வர்மா, பலேஷ் சந்திர பிரசாத் ஆகிய மாணவர் தலைவர்கள் பின்னர் சிறைக்கு கொண்டு போகப்பட்டு அங்கு காவலில் வைக்கப்பட்டனர்.



நடிகர் முத்துராமனுக்கு நடைபெற்ற பாராட்டு விழாவில், நடிகர் சிவாஜி கணேசன், முத்துராமனுக்கு பொன்னாடை போர்த்தியபோது எடுத்த படம்.]

## மாணவர் யார்? மாணவி யார்? சட்டசபையில் அ.தி.மு.க. கேள்வி

சென்னை, டிச. 23—சாரணர் இயக்கத்தில் சேர்ந்திருக்கும் சிறுவர்களுக்கு சீருடை வழங்க 8 லட்ச ரூபாய் ஒதுக்கும் திட்டம் ஒன்று அரசின் பரிசீலனையில் இருப்பதாக கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் சட்டசபைக் கேள்வி நேரத்தில் தெரிவித்தார்.

இதற்கான கேள்வியை என். கே. பழனிச்சாமி கேட்டிருந்தார்.

சாரணர் பயிற்சி தரும் ஆசிரியர்களுக்கு தனி ஊதியம் தருவது பற்றியும் அரசு பரிசீலித்து வருகிறது.

தமிழகத்தில் உள்ள பள்ளிச் சிறுவர்களில் 10 சதவிகிதம் சேர்க்கவேண்டும் என்ற கருத்து இருக்கிறது.

தமிழகத்தில் மொத்தம் 72 லட்சம் சிறுவர்கள் படிக்கிறார்கள். இந்தக் கணக்குப்படி $7\frac{1}{2}$ லட்சம சிறுவர்கள் சாரணர் இயக்கத்தில் இருக்க வேண்டும். ஆனல் 72 ஆயிரம் மாணவர்கள்தான் சாரணர் இயக்கத்தில் சேர்ந்திருக்கிறார்கள் என்ற தகவலையும அமைச்சர் தந்தார்.

கோவைசெழியன்:—மாணவர்கள் இடையே ஹிப்பியிசம் பரவி வருகிறது. மாணவி யார்? மாணவர் யார் என்ற வித்தியாசம் தெரியவில்லை. ஆகவே மாணவர்கள் இடையே கட்டுப்பாடு வளர சாரணர் இயக்கம் பயன்படுத்தப்படுமா?

அமைச்சர்:—அந்த அடிப்படையில் தான் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

# இ. காங்கிரஸ் ஊழலை ஒழிக்க இ.காங். கிளர்ச்சி

கல்கத்தா, டிச. 23—இ. காங்கிரஸ் ஊழலை ஒழிக்க இ.காங்கிரஸ்காரர்களே கிளர்ச்சி நடத்த முடிவு செய்துள்ளனர்.

இந்திரா காங்கிரஸ் கட்சிக்குள் ஊழல், அநீதி, அடக்கு முறை ஆகியவை பருகி விட்டதாகவும், இதை எதிர்த்து போராடுவதில்தான், இந்திரா காங்கிரசைக் காப்பாற்ற முடியும் என்றும் அவர்கள் கூறினர்கள்.

இது குறித்து மேற்கு வங்காள இ. காங்கிரசின் முன்னாள் பொதுச் செயலாளர் கிருஷ்ணகுமார் சுக்லா (எம். எல். ஏ.) ஒரு கூட்டத்தைக் கூட்டினர். அதில் 200 க்கும் மேற்பட்ட இ. காங்கிரஸ், தலைவர்கள், எம்.எல்.ஏ.க்கள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

முன்னாள் உதவி முதல் அமைச்சர் விஜயசிங் எம். எல். ஏ. இந்தக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

இந்தக் கூட்டத்தில்தான், இ. காங்கிரஸ் ஊழலை எதிர்த்து போராட்டம் நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

கட்சிக்குள் இருக்கும் அதிகாரமோகம் கொண்ட சுயநலக்காரர்களை, நாணயமான இந்திரா காங்கிரஸ்காரர்கள் அடையாளம் காட்டவேண்டும் என்று இந்தக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## மக்கள் ஏமாற்றம்

'கட்சி ஊழியர்கள் செயல்படுவதற்கு ஏற்றுக்கொள்ளத்தக்க ஒரு வேலைத் திட்டத்தை வகுக்க மேற்கு வங்க பிரதேச புதுகாங்கிரசின் தற்போதைய தலைமை தவறிவிட்டது. இதன் விளைவாக கட்சிக்குள் பூசல்களும், வன்முறைச் சம்பவங்களும் ஏற்பட்டுள்ளன. சென்ற தேர்தல் நடந்து மூன்று ஆண்டுகள் ஆகியும் தூய்மையான முற்போக்கான, ஊழலற்ற நிர்வாகத்தை புது காங்கிரஸ் கட்சி அமைக்க இயலவில்லை என்பதைக் காண மக்கள் ஏமாற்றமடைந்துள்ளார்கள்' என்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இலங்கை

# புரட்சித் தலைவனுக்கு ஆயுள் தண்டனை

கொழும்பு, டிச. 23—இலங்கையில் திருமதி பண்டாரநாயகா அரசை கவிழ்க்க புரட்சி நடத்திய தலைவர் விஜயவீராவுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.

இலங்கை அரசை கவிழ்க்க 1971ம் ஆண்டு ரத்தப் புரட்சியை நடத்திய 33 பேர் நேற்றுதண்டிக்கபட்டார்கள்.

இந்தபுரட்சியைமுன்னின்று நடத்திய "மக்கள் விடுதலை முன்னணி"யின் தலைவரான விஜயவீராவுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. மற்றும் 28 பேர்களுக்கு 3 ஆண்டு முதல் 15 ஆண்டு வரை சிறை தண்டனை விதிக்கப்பட்டது. மீதி 4 பேர்களுக்கு தலா 2 ஆண்டு ஜெயில். 4 பேர் விடுதலை செய்யப்பட்டனர்.

# வைத்திய ரத்தினம் பதிலளிக்கிறார்

★★★★★:★★★★—: வி. பலராமய்யா :—★★★★:★★★★★

ஓய்வுபெற்ற நீதிபதி வி. பலராமய்யா, சித்த வைத்திய முறையின் தலைசிறந்த நிபுணர்களில் ஒருவர், சித்த வைத்திய முறையில் அவர் விரிவான ஆராய்ச்சி நடத்தி பல புத்தகங்களை எழுதியுள்ளார்.

சித்த வைத்தியராக அவர் பல ஆண்டுகளாக நற்பணி ஆற்றிவருகிறார். நூற்றுக் கணக்கானபேர் அவரிடம் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

ஆங்கில வைத்திய முறையில் குணப்படுத்த முடியாத பல நோய்களை சித்தவைத்திய முறையினுல் குணப்படுத்த முடியும் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

நவமணி வாசகர்கள் கேட்கும் கேள்விகளுக்கு பதில் எழுத அவர் இசைந்துள்ளார். அவருடையபதில் ள்,ஞாயிறுதோறும் நவமணி பத்திரிகையில் வெளியாகும்.

★ ★

## விடாத சளிக்கு மருந்து

கேள்வி:—

எனக்கு எப்போது பார்த்தாலும் சளி இருந்தபடி இருக்கிறது. சரியாக சுவாசிக்கவே சிரமமாக இருக்கிறது. மாலை நேரங்களில் லேசாக கனகன வென்று சூடாக இருக்கிறது.

எம். ராஜவேலு, ஜாபர்சா தெரு, திருச்சி.

பதில்:—

இந்நோய்க்கு,பீனிசமெனப் பெயர். பனிக்காலங்களில் அதிகமாய் தாக்கும். பொதுவாக மூலத்தில் அதிக வெப்பம் உண்டாவதால் நீர் மேலேறி தலையைப் போய் பிடித்துவிடுகிறது, நாம் சுவாசிக்கும் காற்றினுல் ஆவி குளிர்ந்து நீராக மாறி மூக்கு துவாரங்களில் அடைபட்டு மூச்சுத் திணறல் உண்டாகிறது.

மருந்து: முசுமுசுக்கைக் கொடியின் 6 இலைகளைப் பறித்துக்கொள்ளவும். புழுங்கலரிசி ஒரு கையளவு எடுத்து தண்ணீரில் ஊறவைத்து நன்ருக ஊறிய பிறகு எடுத்து அம்மியில் வைத்து மேற்சொன்ன இலைகள், 10 மிளகு, கொஞ்சம் உப்பு சேர்த்து அரைத்து தோசைக் கல்லில் நல்லெண்ணெய் தடவி அடை சுட்டு ஒன்றுவிட்டொரு நாள் 10 நாட்கள் சாப்பிடவும்.

பத்தியம்: மருந்து முடியும் வரை புலால் சாப்பிடக் கூடாது.

மற்றொரு மருந்து:—2 அவுன்ஸ் காய்ச்சி ஆறிய தண்ணீரில்-6 துளசி இலைகள் இரவில் போட்டு மூடிவைக்கவும். காலையில் எழுந்தவுடன் பல் துலக்கிக்கொண்டு அந்த நீரை மாத்திரம் சாப்பிடவும்.

தலைக்கு:— நல்லெண்ணெயில் ஒரு மிளகாய் போட்டு மிளகாய் கறுக்கும் அளவுக்கு காய்ச்சி, இறக்கி தலையில் தேய்த்து, சிகைக்காயினுல் வெந்நீரில் சுத்தம் செய்து கொள்ளவும்—இப்படி வாரத்திற்கு ஒருதடவைசெய்யவும்.

★ ★ ★

கேள்வி:—

நீண்ட காலமாக எனக்கு தலைசுற்றல் இருந்துவருகிறது. படுக்கையிலிருந்து எழும் போது மிகவும் அதிக மயக்கமாக இருக்கிறது.

கே. கருணாகரன், கீழவீதி, திருவாரூர்.

பதில்:—

தலைசுற்றல்,மயக்கம்முதலிய அடையாளங்கள் பித்த மிகுதியைக் காட்டுகின்றன.

சீரகம், இஞ்சி, கொத்தமல்லிக்கீரை, புதினுக்கீரை, கறிவேப்பிலை முதலியவைகளை உணவில் அதிகமாய் உபயோகிக்கவேண்டும்.

இஞ்சியை மேல்தோல் நீக்கி ஒரு அங்குல அளவுக்கு எடுத்து அம்மியில்வைத்து அரைத்து மூன்று அவுன்ஸ் தண்ணீரில் கலக்கி அரை மணி நேரம் தெளியவைக்கவும். பிறகு மேற்தெளிவை மட்டும் வடித்துக்கொண்டு, தேக்கரண்டியளவு தேன், ஒரு எலுமிச்சம் பழச்சாறு கலந்து காலையில் வெறும் வயிற்றில் சாப்பிடவும். இப்படி ஒரு மண்டலம் (அதாவது 48நாட்கள்) உபயோகப்படுத்துங்கள் மயக்கம் அற்று தெளிவு உண்டாகும்.

பித்த மிகுதியை உண்டாக்கக் கூடியவை காபி,சிகரெட், மதுபானம், கொத்தவரங்காய் முதலியவை என்பது குறிப்பிடத் தக்கது.

★ ★ ★

கேள்வி:—

எனக்கு வயது 30. மாதவிடாய் வரும் நாட்களில் வயிற்றுவலியும், கால்வலியும், உடற் சோர்வும் அதிகமாக இருக்கிறது.

ஆர். ராதாபாய், நீலா வடக்கு வீதி, நாகப்பட்டினம்

பதில்:—

இதை சூதக வலி என்று சித்த மருத்துவத்தில் சொல்லப்பட்டுள்ளது. பெண்களுக்கு மாதவிடாய் காலங்களில் சிறிது வயிற்றுவலி இருக்கலாம். ஆனுல் தங்களுக்கு வலி அதிகமாயிருப்பதால்தான், கால் வலி, சோர்வு முதலியவை உண்டாகின்றன. சிலருக்கு வாந்தியும் உண்டாகும்.

எண்ணி மிளகு 11; உறித்த பூண்டு பல் 9.

இந்த இரண்டையும் அம்மியில் ஒட்டிக்கொள்ளாத படி பக்குவமாக அறைத்து பசுங் கோமியம் ½ அவுன்சில் கலக்கி மாதவிடாய் வந்த பிறகு மூன்று நாட்கள், காலை வெறும் வயிற்றில் சாப்பிடுங்கள். மாலையில் மாதவிடாய் வந்தால் மறுநாள் காலையில் சாப்பிடலாம்.

பத்தியம்: அந்த மூன்று நாட்களும் புலால் (முட்டை உள்பட) சாப்பிடக்கூடாது. உருளைக்கிழங்கு, சேப்பங் கிழங்கு கூடாது.

★ ★ ★

கேள்வி:—

எனக்கு வயது 33. இரண்டு கால்களிலும் முழங்காலில் கடுமையான வலிஇருக்கிறது. உட்கார்ந்துவிட்டு எழுந்திருக்கவே சிரமமாக உள்ளது. முழங்காலின் பிற்பகுதியில் லேசாக வீக்கம் உள்ளது.

எஸ். அருணாசலம், காசாங்குளம் வடகரை, பட்டுக்கோட்டை.

பதில்:—

முடக்கத்தான் மூலிகையைத் துவையல் செய்தோ, தோசை மாவு அவைக்கும் போது 10 இலைகளைப் போட்டு அரைத்து தோசை சுட்டோ அடிக்கடி சாப்பிடுங்கள். மலம் பிரதி தினமும் கழியவேண்டும். மொத்தத்தில் தங்கள்உடலில் வலிமை குறைந்துள்ளதென்பது தெரிகிறது. அயச்செந்தூரம், ஆறுமுக செந்தூரம் முதலிய செந்தூரங்களில் ஏதாவதொன்றும், வல்லாரை லேகியமும் காலை-மாலை 48 நாட்கள் சாப்பிடுதல் நலம். ஆங்கில மருந்தில் இவ்வித நோய் குணமாகாது.

வேப்பெண்ணெய் ½ லிட்டர்
பூண்டு 200 கிராம்
கடுகு 50 கிராம்

பூண்டை தண்ணீர் தெளித்து இடித்து சாறு பிழிந்து கொண்டு, அதைவிட்டு கடுகை அரைத்து வேப்பெண்ணெயில் எல்லாம் கலக்கி பக்குவமாய் ஈரம் வற்ற காய்ச்சி புட்டியில் வைத்துக் கொண்டு வீக்கம் கண்ட இடத்தில் தேய்த்து, வறுத்த உப்பை துணியில் முடிந்து கொண்டு ஒத்தடம் கொடுக்கவும்.

பத்தியம்: கிழங்குகள், வாழைக்காய், வாழைப்பழம் சாப்பிடக்கூடாது.

"வைத்தியப் பகுதி"யில் வாசகர்கள் கேட்க வேண்டிய முகவரி:—

ஆசிரியர்,
வைத்தியர் பகுதி
நவமணி, சென்னை-28.

# திருச்சி இராமகிருஷ்ண குடிலுக்கு ரூ.10 ஆயிரம் முத்துராமன் நிதிஉதவி

திருச்சி, டிச. 23—திருச்சி அருகில் திருப்பராய்த்துறையிலுள்ள இராமகிருஷ்ண மாணவர் குடிலுக்கு நடிகர் முத்துராமன் ரூ. 10 ஆயிரம் நிதி உதவி அளித்தார்.

கடந்த 25 ஆண்டுகளாக நாடகம், சினிமா உலகம் இரண்டிலும் கலைப்பணியாற்றும் நடிகர் முத்துராமனுக்கு பாராட்டு விழா நடைபெற்றது.

சென்னை பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் நடைபெற்ற விழாவிற்கு சிவாஜி கணேசன் தலைமை வகித்தார்.

## சிவாஜி பாராட்டு

முத்துராமனுக்கு பொன்னாடை போர்த்தி சிவாஜி கணேசன் பேசும்போது கூறியதாவது:

"தம்பி முத்துராமனைப் பற்றி நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. தமிழ்த் திரைப் படங்கள் ஓடும் இடங்களிலெல்லாம், தமிழ் உள்ளங்களிலெல்லாம் அவர் புகழ் நிலைபெற்றுள்ளது. அவரது திறமையை நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

முத்துராமன் கலையுலகில் நமக்குப் படைத்துத் தந்த பாத்திரங்கள் சுவையானது. இந்தப் பாராட்டின் மூலம் அவருக்கு கற்பனை பெருக வேண்டும். இளம் தலைமுறையில் முன்னேடியாக இருக்கும் முத்துராமன் மக்கள் மனதில் சிறந்த இடத்தைப் பெற்று மிகச்சிறந்த நடிகர் என்று புகழ்பெற வேண்டும்.

கலையில் தமிழகம் தலை நிமிர்ந்து நிற்க தமிழ் ரசிகர்கள் தங்கள் வீட்டுப் பிள்ளையை வளர்ப்பதைப் போல் கலைஞர்களுக்கு ஆதரவு தருகிறார்கள்.

இவ்வாறு சிவாஜி கணேசன் கூறினர். வெள்ளிக்கேடயம் ஒன்றையும் வழங்கினர்.

டைரக்டர்கள் பி.மாதவன் கிருஷ்ணமூர்த்தி, எஸ். பி. முத்துராமன், நடிகர்ஸ்ரீகாந்த் சிவகுமார், சுருளிராஜன், வசந்தகுமார், ஆகியோர் பாராட்டிப் பேசினர்கள்.

பி. பி. சீனிவாசன் வாழ்த்துப் பாடல் ஒன்றைப் பாடினர்.

## முத்துராமன் நன்றி

முத்துராமன் நன்றி தெரிவித்துக் கூறியதாவது:—

"பாராட்டு விழா போன்றசங்கடமான நிகழ்ச்சிகளில் நான் மாட்டிக்கொள்வதில்லை.

என்னை நாடக உலகில் நன்கு அறிமுகப்படுத்திய எஸ்.வி. சகஸ்ரநாமம், திரையுலகில் 'நெஞ்சில் ஓர் ஆலயம்' மூலம் அறிமுகப் படுத்திய டைரக்டர் ஸ்ரீதர் ஆகியோர் பாதகமலங்களுக்கு எனது நன்றியையும், எனக்கு வந்த பாராட்டுரைகளையும் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

எனக்குத் தொடர்ந்து ஆதரவு தரும் ரசிகர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

## ரூ. 10 ஆயிரம் நிதி உதவி

இந்த நல்ல நிகழ்ச்சியின் நினைவாக திருச்சி, திருப்பராயத்துறைஇராமகிருஷ்ணர் குடிலுக்கு ரூ. 10 ஆயிரம் அளிக்கிறேன்,

இவ்வாறு முத்துராமன் கூறினர்.

ரூ. 10 ஆயிரத்துக்கான 'செக்'கை டைரக்டர் கிருஷ்ணமூர்த்தியிடம் அளித்தார்.

## பொன்னாடை

முத்துராமனுக்கு இளங்கோ கலைமன்றம்சார்பில் வீரப்பன் பொன்னாடை அணிவித்தார். சபாக்கள், பட நிறுவனங்கள் சார்பில் மாலைகள் அணிவிக்கப்பட்டன.

ஜெயா, உஷாநந்தினி, கனக துர்கா, ஜெயபிரியா மற்றும் ஏராளமான திரையுலகப் பிரமுகர்கள் கலந்து கொண்டனர்.

கலாநிகேதன் எஸ் ஜானகிராமன் வரவேற்றார்.

எம். எஸ். விஸ்வநாதன் குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சி இறுதியாக நடைபெற்றது.

கருணாநிதி ஆவேசப் பேச்சு:

# "ராவணனை வீழ்த்தியது போல் தி. மு. கழகத்தை வீழ்த்த முடியாது"

சென்னை, டிச. 23—ராவணனை, கும்பகர்ணனை, கட்டபொம்மனை, மூவேந்தர்களை வீழ்த்தியதைப் போல், மூவேந்தர்களின் வாரிசாக உள்ள திராவிட முன்னேற்றக் கழகத்தை வீழ்த்த முடியாது என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினர்.

"காரணம் நாங்கள் பெரியாரின் பாசறையில் பயின்றவர்கள். அண்ணா கற்றுத் தந்த ராஜதந்திரங்களின் பயிற்சி நமக்குத்தான் உண்டு" என்றும் கருணாநிதி குறிப்பிட்டார்.

சென்னை தியாகராயநகரில் நடைபெறும் பெரியார் நினைவு நாள் கூட்டத்தில் கலந்துகொண்டு கருணாநிதி பேசும்போது கூறியதாவது:

## இன்னொரு ஆட்சி வராது

தி. மு. கழகம் இன்று ஆட்சிப் பொறுப்பில் இருக்கிறது. பெரியார் இதே மேடையில் கடந்த ஆண்டு "கழக ஆட்சி நடைபெறுகிறது என்றாலும் நான் சொல்வதை எல்லாம் அவர்களால் செய்ய முடியுமா என்றால் முடியாது. ஏனென்றால் அவர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருக்கிறார்கள். அவர்களுக்கு அதிகச் சங்கடத்தை நாம்தரகூடாது. ஆனுல், இந்த ஆட்சிபோனுல் மறுபடியும் தமிழர்களைக் காப்பாற்ற, இன்னொரு ஆட்சி வராதுஎன்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்" என்று தெரிவித்தார்.

## கோடரிக் காம்பு

யாராலும் அழிக்கமுடியாத கழகம், வீழ்த்த முடியாத கொள்கை சிதைக்க முடியாத இலட்சியம் இவைகளை நேருக்குநேர் எதிர்த்து சாய்க்க முடியாது என்பதால் தான் நமமுடைய வரலாற்று காலத்திலிருந்து, எதிரிகள் கடைப்பிடிக்கின்ற நம்மில் ஒரு கோடரிக் காம்பு கிடைக்காதா? இங்கே ஒரு துரோகி கிடைக்க மாட்டானா? இங்கே ஒரு வீடணன், ஒரு சுக்ரீவன் அகப்படமாட்டானா என்று தேடித் தேடி அலைந்து தொன்று தொட்டு அவர்கள் நடத்திய போர் முறையை இன்றைக்கும் நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

ஆகவே ராவணனை வீழ்த்தியதைப் போல். கும்பகர்ணனை வீழ்த்தியதைப் போல். கட்டபொம்மனை வீழ்த்தியதைப் போல், இந்த நாட்டிலே உள்ள தமிழ்த் தலைவர்களை திராவிட வேந்தர்களை வீழ்த்தியதைப் போல், அவர்களுடைய வாரிசாக இருக்கிற திராவிட முன்னேற்றக் கழகத்தை வீழத்த முடியாது.

## பாசறை பயிற்சி

காரணம், நாங்கள் பெரியாரின் பாசறையில் பயின்றவர்கள்: அண்ணா கற்றுத் தந்த ராஜ தந்திரங்களின் பயிற்சி நமக்குத்தான் உண்டு.

நாவலர் அடிக்கடி கூறுவதைப் போல், பெரியாரை, அண்ணாவைப் பார்த்தவர்கள் பலர். அந்த இருவரிடமும் பழகியவர்கள் சிலர்; அந்தச் சிலர் தான் நாங்கள்.

பார்ப்பதற்கும், பழகுவதற்கும் வேறுபாடு உண்டு சில பேர் "பார்ப்பார்கள்."—நாங்கள் எல்லாம் பழகியவர்கள் அண்ணாவிடமும், பெரியாரிடமும் மணிக்கணக்கில், நாட் கணக்கில் பேசி விவாதித்து, இந்தக் கொள்கைகளில் உறுதியானவர்கள் தான் நாங்கள்.

இவ்வாறு கருணாநிதி பேசினர்.

# டெல்லியில் சர்வதேச சினிமா விழா

புதுடெல்லி, டிச. 23-இந்தியாவில் 5-வது சர்வதேச சினிமா விழா டெல்லியில் இந்த மாதம் 30-ந் தேதியிலிருந்து அடுத்த மாதம் 12-ந் தேதிவரை நடைபெறும்.

இந்த விழாவில் 42 நாடுகள் கலந்துகொள்ளும்.

சிறந்த சினிமா படங்களைத் தேர்ந்தெடுப்பதற்காக சத்யஜித்ரே தலைமையில் 9 நடுவர்கள் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது

இந்த சினிமா விழாவுக்காக பல்வேறு நாடுகளிலிருந்து 318 சினிமா படங்கள் வந்து சேர்ந்துள்ளன.

இரண்டாவது நாளாக

கொள்ளைக்கூட்டத்தின் அக்கிரமம்

# துப்பாக்கியால் சுட்டு ரெயிலில் கொள்ளை: ரூ. 6 லட்சம் அபேஸ்

நவாடா, டிச. 23—பீகாரில் இரண்டு நாட்களாக தினந்தோறும் ஒரே இடத்தில் ரெயிலில் கொள்ளைக் கூட்டம் புகுந்து பயங்கரக் கொள்ளை நடத்தியது.

இரண்டாவது நாளாக நேற்று நடந்த பயங்கரக் கொள்ளையில் ரெயில் பயணிகளிடமிருந்து 6 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பொருள்கள் பறிபோயின.

கயை நகரிலிருந்து ஒரு ரெயில், கர்ஜாரா ரெயில் நிலையத்திற்கு நேற்று காலை வந்து சேர்ந்தவுடன் கொள்ளைக்காரர்கள் சுமார் 100 பேர், 8 கோஷ்டிகளாகப் பிரிந்து ரெயிலில் புகுந்து, கண்மூடித்தனமாக ஈவு இரக்கமின்றி பயணிகளிடம கொள்ளை அடித்தனர்.

எதிர்ப்பு தெரிவித்த பயணிகள் மீது அந்தக் கொள்ளைக்காரர்கள் துப்பாக்கியால் சுட்டனர்; கத்திக்குத்தும் நடத்தினர்கள். அதனுல் 7 பயணிகள் காயம் அடைந்தனர்.

நேற்று முன்தினம் இதே இடத்தில் ரெயிலில் பயங்கரக் கொள்ளை நடந்தது. கொள்ளைக்காரர்களின் துப்பாக்கிச் சூடு கத்திக்குத்து ஆகியவைகளுக்கு சுமார் 12 பயணிகள் ஆளாகி காயம் அடைந்தனர்.

# பழனியிலிருந்து கொடைக்கானலுக்கு 18 மைல் நீள மின்சாரத் தொட்டில்

சென்னை, டிச, 23—பழனி மலையையும்,கொடைக்கானல் மலையையும் இணைக்கும் வகையில் மின்சார தொட்டில்கள் போய்வரும் கம்பிப்பாதை "ரோப் வே" அமைக்கப்படும்.

தமிழக மேல்-சபையில், சுதந்திரா கட்சி உறுப்பினர் சாமிநாதன் கேட்ட கேள்வி ஒன்றுக்கு பதில் அளிக்கையில், அமைச்சர் கண்ணப்பன் இதை அறிவித்தார். அவர் கூறியதாவது:—

கொடைக்கானல் மலையில் உள்ள குறிஞ்சி ஆண்டவர் கோவிலுக்கும், பழனியில் உள்ள பழனி ஆண்டவர் கோவிலுக்கும் இடையில் ஒரு மின்சார கம்பி தொட்டில் (ரோப் வே) போடுவதற்கு பழனி தேவஸ்தானம் திட்டமிட்டுள்ளது.

இது 18 மைல் நீளத்திற்கு போடப்படும். ஒரு மணி நேரத்தில் 400 பேர் ஒரு இடத்திலிருந்து மறு இடத்துக்கு போக முடியும். சுற்றுப் பாதையில் வருவது என்றால் ஏறத்தாழ 80 மைலுக்கு மேல் ஆகும் என்று தெரிகிறது. இந்த விஷயம் பரிசீலனையில் உள்ளது.

இவ்வாறு அமைச்சர் தெரிவித்தார்.

# தொழில் நுணுக்க பல்கலைக் கழகம்

சென்னை. டிச, 23—தமிழகத்தில் தொழில் நுணுக்கப் பல்கலைக் கழகம் ஒன்றை அமைக்க அரசு ஏற்பாடு செய்து வருகிறது. இதுபற்றி பல்கலைக் கழக மானியக் குழுவும், மத்திய அரசும் முடிவு எடுக்கவில்லை என்று என். கே பழனிச்சாமி கேட்ட கேள்விக்கு அமைச்சர் நெடுஞ்செழியன் பதில் அளித்தார்

## உலகத் திரைப்பட விழா:

# தமிழ் நட்சத்திரங்கள் புறக்கணிப்பு

## மத்திய அரசின் போக்கை எதிர்த்துப் போராட முடிவு

**சென்னை, டிச. 23—டெல்லியில் நடக்கும் உலகத் திரைப்பட விழாவில் சிவாஜி கணேசன் நடித்த எந்தப் படமும் திரையிடப்படவில்லை. தலை சிறந்த தமிழ்க் கலைஞர்களை அழைக்கவில்லை. ஆகவே நாம் அந்த விழாவைப் புறக்கணிக்கவேண்டும் என்று ஏ.எல். சீனிவாசன் கூறினர்.**

தமிழகத்தின் சிறந்த நடிகர்களை மத்திய அரசு மதிப்பதில்லை. அந்தக் குறையைப் போக்க எல்லா வகையிலும் போராடுவோம் என்றும் அவர் தெரிவித்தார்.

சிவாஜி கணேசன் நடித்த "தங்கப் பதக்கம்" படத்தின் வெள்ளிவிழா மயிலை, உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடைபெற்றது.

சிவாஜி புரொடக்ஷன்ஸ் சார்பில் பி. என். பிள்ளைவர வேற்ருர்.

விழாவிற்குத் தலைமை வகித்து ஏ. எல். சீனிவாசன் பேசும்போது கூறியதாவது:

"1974-ம் ஆண்டில் தகுதியோடு வெள்ளி விழா கொண்டாடிய தனிப்படம் தங்கப்பதக்கம். இந்த ஆண்டில் 25 வாரங்கள் ஓடிய ஒரே தமிழ்ப்படம் தங்கப் பதக்கம்.

சிவாஜி கணேசனின் நேர்த்தியான நடிப்பைப்பற்றி நான் கூறவேண்டியதில்லை. இப்படியொரு பெரும் செல்வத்தை பெற்றதற்காகத் தமிழகம் பெருமையடைகிறது.

சிவாஜியின் நடிப்பில் பெரிதும் மயங்கிப் போனவன் நான். சிவாஜி கணேசன் ஆரம்பத்திலிருந்து கதாநாயகனுகவே நடித்து தொடர்ந்து வெற்றிகளைத் குவித்து வருபவர். நான் ஒரு வெற்றிப்படம் எடுத்தால் 3 தோல்விப்படங்களை எடுப்பேன்.

அவருக்குவரும் புகழையும், பாராட்டையும் கண்டு பூரிப்பதில் முதலாமவன் நான்.

சிவாஜி நல்ல நடிகர் மட்டுமல்ல—நல்ல குடும்பஸ்தர். பெருங் குடும்பமாகத் தன்னுடன் பலநடிகர்களைவைத்து வாழவைக்கிருர்.

இன்றைக்கு தமிழகத்தில் நடிப்பால் வெற்றி பெறுபவை சிவாஜியின் படங்கள் தான்.

மற்ற படங்கள் வெற்றி பெறுவதற்கு பல காரணங்கள் உள்ளன.

தமிழகத்தின் மாபெரும நடிகரான அவர் நாளை ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்கிருர். இந்த விழாவின் மூலமே அவரை வாழ்த்தி வழி அனுப்புகிறேன்.

தமிழகத்தில் மட்டுமின்றி உலகம் முழுதும் அவரது புகழ் பரவவேண்டும். இதுவரை அப்படி புகழ் பரவாததற்கு அவர் தமிழனுக இருப்பது காரணமாக இருக்கலாம்.

மத்திய அரசு யார் யாரையோ வெளி நாட்டுக்கு அனுப்புகிறது.

சிவாஜியை அனுப்பினுல் இந்தியாவிற்கு பெரும் புகழைத் தேடிவார் என்பது நிச்சயம்.

### உலகப்பட விழா பகிஷ்கரிப்பு

5-வது உலகப் படவிழா டெல்லியில் நடக்கிறது.

சிவாஜி பிறந்த தமிழ்நாட்டிலிருந்து ஒரு படம்கூடச் செல்லவில்லை என்பது மிகவும் வேதனையானது.

சென்றமுறை சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்தபோதும் இப்படித்தான் நடந்து கொண்டார்கள்.

தமிழகத்தில் இந்த விழா நடந்தால் தமிழக மக்கள் யாரும் கலந்து கொள்ளாமல் பகிஷ்கரிக்கவேண்டும்.

தமிழகத்தின் தலைசிறந்த கலைஞர்கள் சிவாஜி கணேசன் போன்றவர்கள் இந்த உலகப் பட விழாவிற்கு அழைக்கப் படவில்லை. ஆகையால் தமிழகக் கலைஞர்கள் இந்தப் பட விழாவைப் பகிஷ்கரிக்க வேண்டும்.

மத்திய அரசு தமிழ்க் கலைஞர்களைசரியாகமதிப்பதில்லை. சிறந்த கலைஞர்களை வெளி நாட்டுக்கு அனுப்புவதில்லை. அந்தக் குறையைப் போக்க எல்லாவகையிலும் போராடுவோம என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

'தங்கப்பதக்கம்' வெற்றிக்குக் காரணமான எல்லா கலைஞர்களையும்பாராட்டுகிறேன்.

இவ்வாறு ஏ. எல். சீனிவாசன் கூறினுர்.

சின்ன அண்ணுமலை, டைரக்டர் பி. மாதவன், ரசிகர் மன்றம் சார்பில் மதுரை ஏ. ஜி. சுப்பராமன் ஆகியோர் பேசினுர்கள்.

### கலைஞர்களுக்கு 'தங்கப் பதக்கம்' பரிசு

தங்கப் பதக்கம்' படத்தில் நடித்த சிவாஜி கணேசன், மனேகர், வி. கே. ராமசாமி, சோ, ஸ்ரீகாந்த், மேஜர் சுந்தர்ராஜன், சுருளிராஜன் நடிகையர் கே. ஆர். விஜயா, பிரமிளா, புஷ்பமாலா, டைரக்டர் பி மாதவன் கதாசிரியர் மகேந்திரன், ஒளிப்பதிவாளர் பி, என். சுந்தரம், இசையமைப்பாளர்எம். எஸ். விஸ்வநாதன் பின்னணி பாடிய டி. எம். சௌந்தரராஜன், பி. சுசீலா, வாணி ஜெயராம் ஆகியோருக்கு தங்கப்பதக்கம் பரிசு வழங்கப் பட்டது.

ஏவி. எம். பட நிறுவனம் சார்பில் சிவாஜி கணேசனுக்டிம், டைரக்டர் மாதவனுக்கும், ஏவி. எம். பாலசுப்பிரமணியம்கேடயம்வழங்கினுர்.

சிவாஜி கணேசன் நன்றி கூறினுர்.

---

# கடத்தல் மன்னர் சொத்து பறிமுதல்: 27-ந்தேதி ஆலோசனை

புதுடெல்லி,டிச 23—கடத்தல் மன்னர்களின் சொத்துக்களை எப்படிப் பறிமுதல் செய்வது என்பது பற்றி அடுத்த வாரம் முக்கிய ஆலோசனை நடைபெறவிருக்கிறது.

மத்திய நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் 26-ந் தேதியன்று பம்பாய்க்கும், 27-ந் தேதியன்று சென்னைக்கும், 28-ந் தேதியன்று கல்கத்தாவுக்கும் சென்று சுங்க வருமானவரி அதிகாரிகளுடனும், மாநில அரசாங்கத்தின் பிரதிநிதிகளுடனும் முக்கியஆலோசனை நடத்துவார்.

---

எம். கே. சீனிவாசன் அறிவிப்பு

# அடகு கடைகள் முன் 'கிடுகிடு' கிளர்ச்சி

**சென்னை, டிச. 22—சென்னை தியாகராயநகர் அடகு கடைகளில் அடகு வைத்திருப்பவர்கள், நியாயமான வட்டி கொடுத்து அவர்களுடைய பொருள்களை மீட்பதற்கான போராட்டத்தை இந்த மாதம் 26- தேதியன்று இந்திய பண்டம் பெறுவோர் பாதுகாப்பு இயக்கம் நடத்தவிருக்கிறது என்று அதன் தலைவர் எம். கே. சீனிவாசன் அறிவித்தார்.**

இந்திய பண்டம் பெறுவோர் பாதுகாப்பு இயக்கத் தலைவர் எம். கே. சீனிவாசன் அநியாய வட்டி வாங்கும் வட்டிக் கடைகளை எதிர்த்து புதிய போராட்டத் திட்டம் ஒன்றை அறிவித்துள்ளார்.

அவர் தன்னுடைய அறிக்கையில் கூறியதாவது:

"எங்கள் இயக்கம், அநியாய வட்டிகளை எதிர்த்து போராட திட்டமிட்டிருப்பதை அறிந்து பல்லாயிரக் கணக்கான கடிதங்கள் வந்து குவிந்த வண்ணமிருக்கின்றன.

வட்டிக் கடைகளுக்கு எதிராக நாம் திரட்டுகின்ற அணி புதிய முறையில் செயல்பட வேண்டும். போராட்டம் என்று வட்டிக் கடைகளின் முன்னுல் கண்டனக்குரல் எழுப்புவதில் அர்த்தமில்லை. நேரடிநடவடிக்கையில்ஈடுபட வேண்டும்.

தியாகராயநகர், வண்ணுரப்பேட்டை, ராயப்பேட்டை புரசவாக்கம், மயிலாப்பூர் என்று ஒவ்வொரு பகுதியாக புகுந்து வேலை செய்ய திட்டமிட்டிருக்கிறோம்.

ஆகவே, பவுன்நகை, வெள்ளி பித்தளை, எவர்சில்வர் சாமான்கள், பட்டுப்புடவை, ஆகியவற்றை அடகுவைத்திருப்பவ கள் வருடத்திற்கு ரூ. 100க்கு 12 ரூபாய் வட்டி கொடுத்தால் போதுமானது. அதற்குமேல் ஒரு காசு கூட அதிகமாகக் கொடுக்கக் கூடாது. அடகு சீட்டில் சட்டப்படி அச்சிடப்பட்டிருப்பது அதிகபட்சம் 100-க்கு 12 ரூபாய்தான். இந்தப்படி அசல் வட்டியுடன் பணத்தைசேர்த்கொண்டு 21-ஏ வியாசராவ் தெரு, சென்னை-17 என்கிற முகவரியில் தொடர்பு கொள்ளுங்கள். முதற்கட்டமாக தியாகராய நகர் பர்க்கிட் ரோடில் உள்ள கடைகளில் அடகு வைத்திருப்பவர்கள் வரும் 26ந் தேதி காலை 9 மணிக்கு எங்களோடு சேர்ந்து வட்டிக் கடைகளுக்கு வாருங்கள். நாங்கள் கூட இருந்துஉங்கள் பொருள்களை வாங்கிக்கொடுக்கிறோம்.

தமிழ்நாட்டின் தலைநகரில் எடுக்கப்படும் இந்த நடவடிக்கை இந்தியா முழுதும் எதிரொலிக்கவேண்டும். சின்னஞ்சிறிய கிராமங்களில் பாமரமக்களை ஏமாற்றி அநியாய வட்டி வாங்கும் வட்டிக் கடைகளையும் திருத்தவேண்டும்.

இவ்வாறு எம். கே. சீனிவாசன் தன்னுடைய அறிக்கையில் தெரிவிக்கிருர்.

---

# வெளிநாட்டு மதுபானம் வைத்திருந்ததாக 4 பேர் கைது

சென்னை, டிச. 23—வெளிநாட்டு மது வைத்திருந்ததாக ராமலிங்கம், கண்ணன், வரதன், கிருஷ்ணன் இவர்களை தாம்பரம போலீசார் கைது செய்து வழக்கு தொடர்ந்தனர்.

சாராயம் வைத்திருந்ததாக பெருங்களத்தூர், ஆனந்தபுரம் இந்த இடங்களில் 5 நபர்களை தாம்பரம் போலீசார்கைது செய்து இவர்கள் மீது வழக்கு தொடர்ந்தனர்.

---

# மந்திரிக்கு கூட்டுறவு ஊழியர்கள் நன்றி

சென்னை, டிச. 23—தமிழ்நாடு கூட்டுறவுத்துறை நடுநிலை அலுவலகச் சங்கத்தின் சார்பில் அதன் தலைவர் மு. சிதம்பரம் மற்றும் பொதுச் செயலாளர் தி. பன்னீர் செல்வம், சென்னை, கும்பகோணம் திருவாரூர் ஆகிய கிளைத் தலைவர்களுடன் கூட்டுறவுத் துறை அமைச்சர் மன்னை நாராயணசாமியை அவருடைய இல்லத்தில் சந்தித்து கூட்டுறவு பிரிவு அலுவலரின் பிரயாணப்படியைஉயர்த்தியதற்கு நன்றி தெரிவித்தனர்.

மேலும் மீதியுள்ள தங்களின் தலையாய கோரிக்கைகளை தீர்க்குமாறு வேண்டிக்கொண்டனர். அமைச்சரும் முதல்வரை கலந்து ஆவன செய்வதாக கூறினுர். பின்னர் முதல்வரின் நேர்முக உதவியாளரை கோட்டையில் சந்தித்து விண்ணப்பம் கொடுத்தனர். உதவிச் செயலாளரும் நிதி இலாகா செயலாளரை கலந்து முடிந்த அளவு செய்ய ஏற்பாடுகள் செய்வதாக வாக்களித்தார்.

மேற்கண்ட தகவலை சங்கப் பொதுச் செயலாளர் பன்னீர் செல்வம் தெரிவித்தார்.

---

# அரிசி வியாபாரம்; தனியாருக்கு தடை: அதிகாரபூர்வ உத்தரவு

சென்னை, டிச. 23—நெல் அரிசி ஆகியவற்றின் மொத்த வியாபாரத்தை தமிழக அரசு ஏற்றது.

இதன்படி, அறிவிக்கப்பட்ட பகுதிகளில் தனியார்கள் நெல்-அரிசி மொத்த வியாபாரம் செய்ய அனுமதிக்கப் படமாட்டார்கள்.

இதற்கு வகை செய்யும் அதிகாரப் பூர்வமான உத்தரவு நேற்று பிறப்பிக்கப்பட்டது.

இதற்கு, "தமிழ்நாடு நெல்-அரிசி வியாபாரத்தை ஒழுங்கு படுத்துவதற்கான) உத்தரவு" என்று பெயர்.

இதன்படி, அறிவிக்கப்பட்ட பகுதிகளில் தனியார்கள் நெல்-அரிசி மொத்த வியாபாரம் செய்ய அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

இந்த உத்தரவின்படி, அறிவிக்கப்பட்ட பகுதிகளில் நெல்-அரிசி ஆகியவற்றை அரசாங்கமே கொள்முதல் செய்யும், அல்லது அரசு சார்பில் அனுமதி பெற்ற ஏஜண்டுகள் கொள்முதல் செய்ய அனுமதிக்கப்படுவார்கள்.

உபரி நெல்லைவாங்குவதற்கு கூட்டுறவுத் துறை அனுமதிக்கப்படும். ஆனுல், தனிப்பட்ட வியாபாரிகள் கொள்முதல் செய்ய அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

நெல்—அரிசி ஆகியவற்றின் சில்லறை வியாபாரத்தையும் இந்த உத்தரவு ஒழுங்கு படுத்துகிறது.

இந்த உத்தரவின்கீழ் பதிவு செய்துகொண்டவர்கள் மட்டுமே, சில்லறையில் நெல்—அரிசி வியாபாரம் செய்யலாம்.

---

காரைக்காலில்

# அரசு ஊழியர்கள் ஊர்வலம்

காரைக்கால், டிச. 23—புதுவை மாநில ஆசிரியர் சங்கம் உட்பட அரசு ஊழியர்கள் கூட்டமைப்பைச் சேர்ந்த பல்வேறு சங்கங்கள் 19-ந் தேதி மாலை காரைக்காலில் போராட்ட ஊர்வலம் நடத்தினுர்கள்.

ஆசிரியர்கள், அரசு ஊழியர்கள் கோரிக்கை வருமாறு:

ஆசிரியர்களுக்கு புதிய ஊதிய விகிதத்தை அமுல் செய்ய வேண்டும்.

10 ஆண்டுகள் பணி புரிந்த அனைத்து ஆசிரியர்களுக்கும் செலக்ஷன் கிரேடு தரப்பட வேண்டும்.

காரைக்கால் பகுதிக்கு அரசு ஊழியர்களுக்கு வீட்டு வாடகைப் படி வேண்டும்.

பஞ்சப்படி முடக்கச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும்.

நிறுத்தி வைக்கப்பட்டுள்ள பஞ்சப்படி உயர்வுகளை உடனே கொடுக்க வேண்டும்.

இந்தக் கோரிக்கைகளை அரசுக்கு தெரிவித்து இருக்கின்றனர்.

இந்த ஊர்வலத்தில் பெண்களும் கலந்துகொண்டார்கள்.

அரசு ஊழியர்கள் பொதுச் செயலர் நாதன், ஆசிரியர் சங்க செயலர் வீரப்பன் ராதா, மற்றும் எல்லாப் பிரிவு பிரதிநிதிகளும் காரை நிர்வாகி எஸ். சீத்தாராமனிடம் கோரிக்கை மனுவை கொடுத்தார்கள்.

---

# "உணவு நெருக்கடி தீர்ந்துவிட்டது" என்கிருர் ஜெகஜீவன்ராம்

**ஜெய்ப்பூர், டிச. 23—நாட்டில் உணவு நெருக்கடி திர்ந்துவிட்டது என்று மத்திய உணவு இலாகா மந்திரி ஜெகஜீவன்ராம் கூறினுர்.**

ஆகவே உணவு நிலைமை பற்றி யாரும் பீதி அடைய வேண்டியதில்லை என்று அவர் தெரிவித்தார்.

உணவுத் தானியங்களின் விலைவாசிகள் மிகவும் குறைந்துவிட்டன என்றும் இந்தப் போக்கு நீடிக்கும் என்று தாம் நமபுவதாகவும் அவர் குறிப்பிட்டார்.

### 164 நாள் உண்ணு விரதம்

சுயதூய்மைக்காக 164 நாட்கள் உண்ணுவிரதம் இருந்த 59 வயது ஜைன பெண்சாமியாரான இச்சராஜ் குன்வார் நுரைத் என்பவரைப் பாராட்டுவதற்காக ஜெய்ப்பூர் நகரில் நடந்த விழா ஒன்றில் மந்திரி ஜெகஜீவன்ராம சிறப்புரை ஆற்றினுர். அந்த சாமியார் இன்று தமது உண்ணுவிரதத்தை முடித்துக் கொள்ளவிருக்கிருர்,

இந்த ஆண்டில் இயற்கை அன்னை கருணை காட்டியிருப்பதாகவும், ரபி கால நடவு உற்சாகம் அளிப்பதாக உள்ளது என்றும் ஜெகஜீவன்ராம் கூறினுர்,

எந்த வியாபாரியாவது உணவுத் தானியங்களை பதுக்க முற்பட்டால், அரசு சும்மா இருக்காதுஎன்று அவர் கடும் எச்சரிக்கை விடுத்தார்.

---

# இனிப்பு பண்டங்கள்மீது சரிகைக்கு தடை வருமா?

சென்னை, டிச. 23—இனிப்புப் பண்டங்கள் மீது வெள்ளி சரிகை சுற்றுவதை தடை செய்வது பற்றி மத்திய அரசு பரிசீலித்து வருவதாக சுகாதார அமைச்சர் அன்பழகன் சட்டசபையில் தெரிவித்தார்.

---

# மாணவர் சேமிப்பு இயக்கம்

காரைக்கால், டிச. 23—காரை கோவிந்தசாமிப் பிள்ளை உயர்நிலைப் பள்ளியில் மாணவர்கள் சேமிப்பு இயக்கம் தொடங்கப்பட்டது.

ஸ்டேட் பாங்கு மேனேஜர் எம். எஸ். சிவராஜன் இந்த இயக்கத்தை தொடங்கிவைத்துப் பேசினுர். சுமார் 20 சதவிகித மாணவர்கள் ஸ்டேட் பாங்கியின் சேமிப்புக் கணக்கில் பணம் செலுத்தினுர்கள்.

சேமிப்புக் கணக்கு 'பாஸ்' புத்தகத்தை மாவட்ட முன்சீப் சி. வி. குமார் மாணவர்களுக்கு வழங்கினுர்.

தலைமை ஆசிரியர் வி. ராஜமாணிக்கம் அனைவரையும் வரவேற்ருர். புலவர் ராமமூர்த்தி நன்றி கூறினுர்.

---

புதிய சக்தி படைத்த மனித

சமுதாயத்தை உருவாக்குவது

# எழுத்தாளர் கடமை: சுப்பிரமணியம் பேச்சு

**சென்னை, டிச. 23—'புதிய சக்தி படைத்த மனித சமுதாயத்தை உருவாக்குவது எழுத்தாளர் கடமை' என்று மத்திய நிதி மந்திரி சி. சுப்ரமணியம் கூறினுர்.**

நேற்று காலை சென்னையில் தேசிய இலக்கிய வட்டம் ஏற்பாடு செய்திருந்த எழுத்தாளர்கள் இலக்கியத் துறையினர் சந்திப்பு கூட்டத்தில் பேசுகையில் மேலும் அவர் கூறியதாவது:

நம் நாட்டின் தனித்தன்மை ஆன்மீக அடிப்படை. மதம் வேறு, ஆன்மீகம் வேறு. மத அடிப்படை குறுகியது. மதம் என்பது ஒரு கட்டுப்பாடு. ஆனுல் ஆன்மீகம் என்பது விசாலமானது, விரிவானது. ஓங்கி வளர்ந்தது. இந்த ஆன்மீகம் நமது தனித்தன்மை. உலகில் விஞ்ஞானம் வளர்ந்திருக்கிறது. நம் நாட்டில் ஆன்மீகம் இன்னமும் அழியாமல் உள்ளது. விஞ்ஞானத்தையும், மெய்ஞ்ஞானத்தையும் இணைப்பது எப்படி என்று நாம் ஆராய வேண்டும். விஞ்ஞான—மெய்ஞ்ஞான இணைப்பு என்ற இலட்சியம் உலகில் பரவ நாம் வழிவகுக்க வேண்டும். இதில் எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் பணி முக்கியமானது. இன்றைய பிரச்சினைகளைத் தீர்க்கக் கூடிய புதிய சக்திபடைத்த மனித சமுதாயத்தை உருவாக்குவது எழுத்தாளர்களின் மாபெரும் பொறுப்பும், கடமையும் ஆகும்.

இவ்வாறு சி. சுப்பிரமணியம் கூறினுர்.

பணத்தைவிட எழுத்தை மதிப்பதைத்தான் எழுத்தாளன் விரும்புகிருன் என்று. கூட்டத்திற்குத் தலைமை வகித்த "கலைமகள்" ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் கூறினுர்.

முன்னுள் முதலமைச்சர் எம். பக்தவத்சலம். கா. அப்பாத்துரையார், ஏ. பி. நாகராஜன், 'தீபம்' நா. பார்த்தசாரதி, அகிலன். அழ. வள்ளியப்பா. கண. முத்தையா, ஔவை நடராஜன், சுந்தா, நாரண துரைக்கண்ணன். சோம. லெ., கி. சந்திரசேகரன், தமிழ்வாணன் ஆகியவர்கள் பேசினர்.

தேசிய இலக்கிய வட்டத்தின் அமைப்பாளர் கருப்பையா வரவேற்புரை நிகழ்த்தினுர். வசுமதி ராமசாமி நன்றி கூறினுர்.

---

# ஜப்பானைவிட சிறந்த பல்லவன் பஸ்கள்

சென்னை, டிச. 23—ஜப்பானைவிட சென்னை நகர பஸ்கள் நல்ல முறையில் இருக்கின்றன என்று போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் இன்று சபையில் தெரிவித்தார்.

பல்லவன் போக்கு வரத்துக் கழகத்தின் 1974-1975ம் ஆண்டில் எத்தனை புதிய பஸ்கள் சேர்க்கப்படும் என்று எஸ். கே. பழனிச்சாமி கேட்டார்.

இதற்குப் பதிலளித்த அமைச்சர் இதுவரை 62 பஸ்கள் சேர்க்கப் பட்டிருப்பதாகவும் அடுத்த பிப்ரவரி இறுதிக்குள் மேலும் 250 பஸ்கள் சேர்க்கப்படும்என்றும்கூறினுர்

சென்னையில் மேலும் பஸ்களை விட மத்திய அரசு ரூ. 3 கோடி தந்திருப்பதாகவும் அமைச்சர் தெரிவித்தார்.

கோவை செழியன்:— பஸ்களில் இருக்கைகள் எல்லாம் மிகவும் சிரமமாக இருக்கின்றன. ஜப்பானுக்குச் சென்ற அமைச்சர் அங்குள்ள புதிய முறைகளை தெரிந்துவந்திருக்கிறாரா?

அமைச்சர்:— ஜப்பானில் நான் பஸ்களில் பயணம் செய்தேன். அங்கிருந்து எதையும் தெரிந்து கொள்ளும் வகையில் இருப்பதாக எனக்குப் படவில்லை. அதைப் பார்த்த பிறகு இங்கிருப்பதே மேல் என்றுதான் எனக்குத் தோன்றியது என்று அமைச்சர் பதிலளித்தார்.



# நீ பிறக்க வில்லை யெனில்...

—கவிஞர் கண்மதியன்—

சீர்திருத்தக் களஞ்சியம் நீ!
சிந்தனையின் விளைநிலம் நீ!
பார்திருத்தப் பிறந்தவன் நீ!
பதவியினை இறுதிவரைப்
பார்க்காது வெறுத்துநின்று,
படிந்துள்ள மடமைகளைக்
கூர்மொழியால் குத்திவீழ்த்திக்
கொலைசெய்த கொலைஞன் நீ!

நடமாடும் சாதிமத
நரிமுன்னே புலியானாய்!
கொடுமைகளைத் தகர்த்தெறிய
கொதித்தெழுந்த புயலானாய்!
மடமைகளின் இடுப்பொடிக்கும்
மணிமொழியில் இடியானாய்!
விடைகாணா பாலையிலே
விடையான மழையானாய்!

நீபிறக்க வில்லையெனில்
நெஞ்சினிலே ஒளியேது?
நீபிறக்க வில்லையெனில்
நினைவினிலே வலிமேது?
நீபிறக்க வில்லையெனில்
நிலந்திருந்த வழியேது?
நீபிறக்க வில்லையெனில்
நீதிக்கும் மொழியேது?

நாளை, (டிச. 24-ம் தேதி) தந்தை பெரியார் மறைந்த தினம். அதையொட்டி இந்தக் கவிதை வெளியிடப்படுகிறது.



தமிழக அரசின் பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகம் வாங்கியுள்ள 'தமிழ்ப் பெரியார் ஈ.வே.ரா.' என்ற முதல் கப்பலுக்கான பத்திரங்களை முதலமைச்சர் கருணாநிதி பெற்றுக்கொள்கிறார்.

# 315 மைல்களுக்குமேல் லாரிகள் செல்ல தடை: சட்டசபையில் தகவல்

சென்னை டிச. 23—டீசல் எண்ணெய் பற்றாக்குறை காரணமாக 500கிலோ மீட்டருக்கு அதிகமாக ஓடும் லாரிகளுக்கு பர்மிட் தர வேண்டாம் என்று மத்திய அரசு மாநில அரசிடம் கோரி இருப்பதாக அமைச்சர் ராமச்சந்திரன் இன்று சட்டசபையில் கேள்வி நேரத்தில் தெரிவித்தார்.

ஆனால் இதுநடைமுறைக்கு ஏற்றதல்ல என்று நாம் மத்திய அரசிடம் தெரிவித்து இருக்கிறோம். இது பற்றி மறுபரிசீலனை செய்வதாக மத்திய அரசு தெரிவித்து இருக்கிறது என்றார் அமைச்சர்.

எந்த அடிப்படையில்மத்திய அரசு டீசல், பெட்ரோல் ஆகியவைகளை பகிர்ந்து கொடுக்கிறதுஎன்பதுபுரியாத புதிராக இருப்பதாக லத்தீபின் கேள்விக்கு அமைச்சர் ராமச்சந்திரன் பதில் அளித்தார்.

லாரி போக்குவரத்தே அரசுடைமை ஆக்கப்படுமா என்று ஆலடி அருணா கேட்டார்.

படிப்படியாக இது அமல் நடத்தப்படவேண்டும் என்றார் அமைச்சர்.

## தாமதம் ஏன்

சென்னை, டிச. 23—சேலம் உருக்காலை திட்டம் மேன் மேலும் தாமதம் ஆவது ஏன் என்று சட்டசபையில் கேள்விகள் கேட்கப்பட்டன.

இதுபற்றி வி. வேழவேந்தன் கேட்டார்.

இது சம்பந்தப்பட்ட அமைச்சர் நமது முதல்வருக்கு கடிதம் எழுதி உள்ளார். பணப் பற்றுக்குறைதான் காரணம் என்று அவர் எழுதி இருக்கிறார்.

இந்த திட்டத்தை விரைவு படுத்தவேண்டும் என்று நாம் அடிக்கடி வற்புறுத்தி வருகிறோம். முதலமைச்சர் அளவிலும் நமது முதல்வர் வற்புறுத்தி இருக்கிறார் என்றார் மாதவன்.

குறித்த காலத்தில் இந்த திட்டம் உற்பத்தியை துவக்குமா என்று ஆலடி அருணா கேட்டார்.

இது குறித்து வற்புறுத்தி வருகிறோம் என்றார் அமைச்சர் மாதவன்.

# கிறிஸ்துமஸ் பாடல்கள் கேட்டு மகிழ்வீர்

சென்னை, டிச. 23— நாளை (24—12—74) காலை 8-20 மணியிலிருந்து 9-மணிவரை சென்னை வானொலி 2 அலை வரிசைகளில் கிறிஸ்துமஸ் வாழ்த்துப் பாடல்கள் ஒலி பரப்பாகின்றன. இராயப்பேட்டை புனித காணிக்கை மாதா ஆலயப் பாடல் குழுவினர் பாடுவர், கேட்டு மகிழ்வீர் என ஜெபமாலை தர்மநாதன் அறிவிக்கிறார்.

# ஜெயலலிதா பெங்களூர் சென்றார்

சென்னை, டிச. 23—நடிகை ஜெயலலிதா இன்று படப் பிடிப்பில் கலந்துகொள்ள பெங்களூர் புறப்பட்டுச் சென்றார்.

உடல் நலக்குறைவினால் லேடி வில்லிங்டன்ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட ஜெயலலிதா பூரண குணமடைந்து நேற்று மதியம்12-30மணிக்கு வீடு திரும்பினார்.

## அறிக்கை

தான் மயக்கம் அடைந்தது குறித்து அவர் ஒரு அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது: 10 மணிக்கு பால் சாப்பிட்டதும் சிறிது நேரத்தில் வாந்தி எடுத்தேன். 3 முறை வயிற்றுப்போக்கு ஏற்பட்டது. அதனால் நான் மயங்கி விழுந்துவிட்டேன்.

வீட்டில் யாரும் இல்லை. என் சித்தியும், சித்தப்பாவும் வெளியில் சென்றிருந்தனர்.

அவர்கள் மதியம் 2மணிக்கு வந்ததும் எனது நிலையைக் கண்டு பதறிப்போய் குடும்ப டாக்டரை அழைத்து வந்தனர்.

ஆகாரம் இல்லாததினால் இப்படி இருக்கிறது. உணவு உட்கொள்ளும் அளவு குறைந்ததால் de-hydlation ஏற்பட்டு மயக்கம் வந்துள்ளது. பயப்பட அவசியமில்லை. உடனடியாக ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வது நல்லது என்றார்.

அங்கே எனக்கு குளுக்கோஸ் செலுத்தப்பட்டது. அன்று இரவே எனக்கு மயக்கம் தெளிந்துவிட்டது. ஞாயிறு மதியம 12-30 மணிக்கு ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பினேன்.

இன்று காலை விமானமூலம் பெங்களூர் செல்கிறேன்.

இவ்வாறு ஜெயலலிதா நேற்று வெளியிட்ட அறிக்கை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

# பெரியார் நினைவு நாள்: என்.வி.என். பேசுகிறார்

சென்னை, டிச. 23— பெரியார் நினைவு வாரம் கடைசி நாள் நிகழ்ச்சி தியாகராய நகர் பஸ் நிலையம் அருகில் இன்று (திங்கள்) மாலை 6 மணிக்கு நடைபெறுகிறது. 'அஞ்சுகம்' ஆசிரியர் இளமுருகு பொற்செல்வி தலைமை வகிக்கிறார்.

அமைச்சர்கள் என்.வி. நடராசன் அன்பில் தர்மலிங்கம், ஏ. பெருமாள், டி.மாரிமுத்து தஞ்சை ஆர். ராசகோபால் ஆகியோர் பேசுகின்றனர்.



# இன்றைய சினிமா

**சென்னை**
ராம் — கலியுகக் கண்ணன்
நியூ எல்பின்ஸ்டன் — திச்சோளி மருமகன் சந்து
நேஷனல் — லவகுசா
சராஸ் — பாபி

**தாம்பரம்**
நேஷனல் — சிரித்து வாழ வேண்டும்
எம்.ஆர். தியேட்டர் — பணத்துக்காக

**வில்லிவாக்கம்**
ராயல்: — ராஜநாகம்

**குரோம்பேட்டை**
வெற்றி: — உத்தமபுத்திரன்





Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S.V.G. Sowrirajulu.
Honorary Editor : N. Muthu kumarasami.